தொல்லியல் தாயின் தவப்புதல்வர், தமிழ்ச்செம்மல்

# திருமிகு ஐராவதம் மகாதேவன்

## பாராட்டுக் கவிதைகள்



# *Early Tamil Epigraphy*

***From the Earliest Times to the Sixth Century A.D.***

## நூல் வெளியீட்டு விழா

நாள்: 15.4.2003
மகாவீரர் ஜெயந்தி

இடம் : பாரதீய வித்யா பவன்
சென்னை-4.

## தமிழகத் தொல்லியல் கழகம்

தஞ்சாவூர்

அன்புடன் இராஜகோபால் - பவானி மற்றும் குடும்பத்தினர்

# போற்றி வணங்குகின்றோம்!

திருமிகு ஐராவதம் மகாதேவன் அவர்கள் தமிழகம் செய்த தவப்பயனால் தொல்லியல் தாயின் தவப்புதல்வராகத் தமிழகத்தில் பிறந்தவர். வாழும் வீடும் வெள்ளை, உடுத்தும் உடையும் வெள்ளை, தோற்றமும் வெள்ளை, உள்ளமும் வெள்ளையெனத் தூய வாழ்க்கை நடத்தி வருபவர்.

கல்லூரியில் பயின்ற காலத்தில் வெள்ளையனை வெளியேற்றும் இயக்கத்தில் கலந்து கொண்டவர்கள். எனினும் 'தியாகி' பட்டம் விரும்பாதவர்கள். பல ஆய்வுகளை முடித்தவர். எனினும் முனைவர் பட்டத்திற்குள் புகுந்து கொள்ளாதவர். உதவிக் கலெக்டராக இருந்தபோதே சமபந்தி போஜனம் நடத்திய சமுதாயச் சிந்தனையாளர்; மதுரைப் பல்கலைக் கழகத்திலும், தமிழகத் தொல்லியல் கழகத்திலும், இராசமாணிக்கனார் ஆய்வு மையத்திலும் தனது மானசீகக் குருக்களின் பெயரால் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிறுவித் தன் சொந்த நிதி தந்த வள்ளல். தினமணி நாளிதழின் வழியாய்த் தரமான பத்திரிக்கையாளருக்கு எடுத்துக்காட்டாய் அமைந்த பெருமகன். தமிழ் தாத்தா உ.வே.சா. சங்க இலக்கியம் கண்டு, படித்துப் பதிப்பித்தது போலவே, சங்ககாலக் கல்வெட்டுகளைத் தேடிப் படித்துப் பதிப்பித்தவர். தமிழ் தாத்தா போலவே தேடுதலும், உழைத்தலும், ஆய்தலும் பண்பாய்க் கொண்ட 'தமிழ்ச் செம்மல்'. உலகப்புகழ் ஆய்வாளர். இந்திய அளவில் பத்மஸ்ரீ, பத்மபூஷன் விருதுகளுக்குத் தகுதிபடைத்தவர்.

ஆய்வுத் தளத்தில் பகைமை பாராட்டாத தனிப் பண்பாளர். ஆய்வுத் தளத்தில் போலிகளையும், தவறுகளையும் தட்டிக் கேட்கும் தகைமையாளர். இளம் ஆய்வாளர்களைச் சகோதரன் என்றும், நண்பன் என்றும், மகன் என்றும் மாறிமாறி அழைத்து நெருக்கம் பாராட்டும் பண்பாளர். பல மனிதர் உதவியும், பந்நூல் உதவியும் தேடிப் பெற்று ஆய்வு செய்வதோடு அவை எல்லாமும் குறித்து

வைத்து நன்றி பாராட்ட மறக்காதவர். இவ்வகையில் ஆய்வின் முன்பின் நிகழ்வுகளை ஆவணப்படுத்துவதால் — உ.வே.சா 'என்சரிதம்' எழுதிச் சுவடிகள் தேடுதலுக்கும், படித்தலுக்கும், ஆய்வுக்கும் நல்லதொரு கையேடு தந்தது போலவே — கல்வெட்டுகள் தேடுதலுக்கும், படித்தலுக்கும், ஆய்வுக்கும் 'என் சரிதம்' எழுத இயற்கையாகவே நிறையத் தரவுகள் கொண்டவர்.

அமெரிக்காவிலிருக்கும் மகன், ஆஸ்திரேலியா சென்றபோது இந்தியாவில் இருக்கும் தம் தந்தைக்கு ஒரு நூல் வாங்கிப் பரிசளிக்கின்றார். நூலின் பெயர் `*Here is the Man Who Deciphered Linear B*'. அந்நூலின் முகப்பில் 'அப்பா' என்று விளித்து வாசகம் ஒன்று எழுதிக் கையொப்பமிடுகிறார். அவ்வாசகம் `*Here is the Man Who Deciphered Indus Script*' (அவரது நூலகத்தில், அவர் எதிரில், அவர் அறியாமல் திரட்டிய செய்தி இது). அம்மகனின் உடன்பிறவாச் சகோதர - சகோதரிகளாகிய எங்களின் அவாவும், எதிர்ப்பார்ப்பும் அதுவே. இருமொழிக் கல்வெட்டுக்காக, ஆய்வைத் தள்ளி வைக்காது ஆய்வைத் தொடங்கினால் இறையருளால் நிச்சயம் அவ்வகைக் கல்வெட்டு கிடைக்கவே செய்யும்.

பானையோடுகளில் உள்ள தமிழ் பிராமி எழுத்துக்களை ஆய்வு செய்தபோது, எப்பகுதியிலும் இல்லாத வகையில் தமிழகத்தில் நிறையப் பானையோடுகளைக் கண்டார். சாதாரண மட்டும் மனிதனையும் எழுத்துக்கள் சென்றடைந்தது கண்டு பூரித்துத் தமிழகத்தில் அன்றே 'அறிவொளி இயக்கம்' என்று தலைப்பில் கட்டுரை எழுதிய இவர்கள் தனது இந்நூல் சாதாரண பள்ளி மாணவனையும் ஆசிரியரையும் சென்றடையத் தமிழாக்கம் தருவார்கள் என்பதும் உறுதி. ஆங்கிலத்திலும் தமிழிலுமான இந்நூல்கள் பல மறுபதிப்புகள் வெளியிடப்படும் என்பதும் உறுதி.

இவை எல்லாவற்றிற்கும், அவர்களுக்கு நல் உடல் நலமும் நீண்ட ஆயுளும் தந்திடத் தொல்லியல் தாயருளும், இறையருளும் வேண்டி அவரருளால் அவர்தாள் வணங்கிப் பணிகின்றோம்.

கல்வெட்டறிஞர், புலவர் ஐயா, முனைவர் இராசு அவர்கள் இயற்றிய செப்பேட்டு வாசகமும், தொல்லியல் அலுவலர் திரு சொ. சாந்தலிங்கம் மற்றும் கல்வெட்டாய்வாளர் திரு பொ இராசேந்திரன் ஆகியோரின் கவிதைகளும் இத்துடன் இணைத்து மகிழ்கின்றோம்.

# வாழ்த்துச் செப்பேடு

சிறந்த கல்வெட்டியல் அறிஞர் திருமிகு ஐராவதம் மகாதேவன் அவர்கள் பண்டைய இந்திய எழுத்தியலில் செய்து முடித்த உயராய்வின் செம்மையையும் பயன்பாட்டையும் பாராட்டி, நன்றியுடனும், மகிழ்வுடனும் தமிழகத் தொல்லியல் கழகத்தார் அளித்த வாழ்த்துச் செப்பேடு

*நன்மங்கலம் சிறக்க!*
*திருவளர் சோழர் திகழ் நாடதனில்*
*மருதம் கொழிக்கும் மாண்பார் பழம்பதி*
*பொன்னியின் வளத்தால் பொன்னி நெல்விளையும்*
*நன்செய் மணச்சநல்லூர் தன்னில்*
*அறவோர் சான்றோர் ஐராவதம் எனும்*
*அறிவுடைத் தந்தை: அலைகலை மகட்கு*
*உரிய நல்மலராம் உயர்கமலம் எனும்*
*பெரும் பெயர்த் தாயார் பீடுடை மகனாய்த்*
*தோன்றிய அறிவு துலங்கு மகாதேவ!*
*திருச்சிராப்பள்ளியில், சென்னை மாநகரில்*
*வேதியல், சட்டம் விளங்கவே கற்று*
*பட்டமும் பரிசும் பாங்குடனே பெற்று*
*இந்திய ஆட்சிப் பணியில் இணைந்தீர்!*
*நாணயவியலில் நாட்டம் கொண்டீர்!*
*சிந்துவெளியின் சீர்மிகு குறிகளைக்*
*கணினி வழியே கணித்தே அறிந்தீர்!*
*நேரு நினைவு நிதியம் பெற்றீர்!*
*இந்திய வரலாற்று ஆய்வுக் கழகத்*
*தேசியத் தகைமையால் திகழ்தமிழ் பிராமியை*
*மறுஆய்வு செய்தே மாண்புகழ் கொண்டீர்*
*குகைகளும் மலைகளும் குன்றுகள் தோறும்*
*காடும்மேடும் கள ஆய்வு செய்தீர்!*
*வாதலூர் தன்னில் வகையுடன் பிராமி*
*கல்வெட்டொன்றைக் கண்டறிந்துரைத்தீர்!*
*சங்கப் பாண்டியர் சால்புடைச் சேரர்*
*தொல்தமிழ் மாந்தரைத் துலங்கச் செய்தீர்!*
*தினமணி தலைமை திறம்பட ஏற்று*

எழுத்துச் சீர்மை எழில் தமிழ் வளர்த்தீர்!
நல்ல தமிழை நாடெலாம் பரப்பினீர்!
சந்திரர் சூரியர் உள்ள நாள் வரைக்கும்
உந்தம் நற்புகழ் ஓங்கியே நிற்கும்
சங்கம் வளர்த்த சால்புடை நகராம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
தமிழ்ச் செம்மல் பட்டம் தந்தே மகிழ்ந்தது
உலகத் தமிழ் மாநாடெங்கணும் சென்று
உங்கள் ஆய்வை உரைத்தே மகிழ்ந்தீர்!
கல்வெட்டுலகின் கலங்கரை விளக்காய்
உயர்தமிழ் ஆய்வின் உன்னத நிலையாய்
அன்பின் எல்லையாய் ஆர்வமாய் நட்பாய்
இன்பமுகமாய் எளியவே எண்ணும்
எங்கள் ஐராவதம் மகாதேவ
மங்காப் புகழுடன் மன்னி வாழ்கவே

புதுக்கோட்டை
11.07.1998

இங்ஙனம்
**தமிழகத் தொல்லியல் கழகத்தார்**

## ஐராவதம் மகாதேவன் அவர்களின் நூல் அரங்கேறும் வேளையில்...

தொல்லெழுத்தியல் துறையில்
தொலைதூரம் பயணித்துஆய்வு
எல்லைகளை விரிவாக்கி
ஏற்ற பொருள் உரைத்து
இல்லை இனி ஐயம் என
எல்லோரும் ஏற்கும் வகை
பல்லறிஞர் சூழ் அவையில்
அரங்கேற்றும் மகாதேவே!

உன்விரல் பிடித்துச் சிலநாட்கள் ஆய்வு
உலாச் செல்லும் வரம்பெற்ற உரிமையினால்
சின்னவன் நான் வாழ்த்த வயதற்று
வணங்குதற்கே விருப்புற்று
நானறிந்த செந்தமிழில்
நல்வாழ்த்துப்பா சுமந்து வந்தேன்.

அவையோரே!
வெற்றுப் புகழ் மொழிகள் உந்தனுக்கு
வேம்பின் காய்கள் அறிவேன் ஆனால்
நான்புகல் மொழிகள் முற்றும் உண்மை!

மாட்சிமை மிகு பண்டிதர்கள் வெறும்
காட்சிப்பொருளாய்க் கல்வெட்டைக் கண்டிருக்க
ஆட்சிப்பணியில் அமர்ந்த நீரோ அவற்றை
ஆய்ந்து அறிந்து எமக்களித்தீர்.

தமிழ்க்கல்வெட்டியலின் தந்தை எனும்
தகுதிபெற்ற கேவிஎஸ் அய்யரவர் உந்தன்
முகம்தடவி முத்தமிட்டு வியப்பெய்தி
வாழ்த்திய வரலாறு உமக்குண்டு.

சிந்துவெளிச் சேகரிப்பில் உம்
சிந்தைதனைச் செலுத்தி நம்
முந்தைமொழி திராவிடத்தின் சாயல் என
முனைந்துரைத்த மூதறிஞர் நீரே.

பழனிமலை தணிகைமலை வட
வேங்கடவன் வாழும்மலை எனப்
பலமலைகள் ஏறிநிதம் சென்று
சாமிகளைத் தரிசிப்பவர் உண்டு நீரோ

ஆனைமலை அயிரைமலை
அமணமலை கழுகுமலை என
கால்கடுக்க ஏறிவந்து
பிராமிதனைக் கண்டுரைத்தீர் இன்று.

வண்ணவண்ண ஆடைகட்டி
வகைவகையாய் மாலையிட்டு
கேரளத்துச் சபரிமலை செல்வார்
ஐயன் திருவடிகள் கண்டுகளி கொள்வார்.

நீரோ அந்தக் -
குடகுமலைக் கானகத்தில்
எடக்கல்லு எனுமிடத்தில்
எழுதிவைத்த தொல்லெழுத்தைக் கண்டாய்
எடுத்து வந்து ஆவணத்தில் தந்தாய்

மேட்டுப்பட்டி மலைஏறி கல்வெட்டு காண்டலினும்
மாட்டுப்பட்டி மேய்த்திடுதல் எளிதாம் அந்தக்
காட்டுப்பட்டி தேசத்திலும்
காளை என எமக்கு முன்னால் சென்றாய்
களைத்த எம்மைக் கேலிபேசி நின்றாய்

தொல்லியலை ஆய்வோர்க்குத்
தொல்லைகளே மிகும் என்பார் சிலபேர்
தொல்லைகளை ஊக்கமருந்து
வில்லைகளாய் விழுங்கிவிட்டு
வெற்றிகளைக் குவித்திடுவீர் நீரே.

முன்னொரு காலத்தில்... தினமணியில்...
'காவிரியில் ஜலம் வந்தது
காரியக்கமிட்டி கூடியது
அக்ராசனர் தேர்வு ரத்து'
என்றெல்லாம் செய்தி வரும்
எம்மனோர் கண்களில் சினம் வரும்
இந்நிலைமாற ஒரு தேவன் வருவாரா
என ஜெயகாந்தக் கனவுகளோடு காத்திருந்தோம்.

கனவு நனவானது
ஐராவதம் தந்த மகாதேவன்
ஆசிரியராய் வந்தார்
அழகுத் தமிழ்ச் சொற்கள் பல
அணிவகுக்க தினமணி புதுமணி ஆனது

இதனால் உம்மையே
வெள்ளானைப் பெருந்தேவன் என
வேடிக்கையாய்ச் சிலர் விளித்தார்
தினமணி நாற்காலி உம்மைச் சிறைவைத்தபோதும்
சிறகை விரித்தாய்
மதுரை மாங்குளத்துச் செழியனும்
கருவூர்ச்சேரன் கடுங்கோவும்
சம்பை மலை அதியனும்
உன்னைத் தூங்க விடவில்லை
தொடர்ந்துவிட்டாய் ஆய்வை

தோள் கொடுத்தார் பல பேர்
பன்னிரண்டு ஆண்டுகள்
பகலிரவாய் உழைப்பு நாற்
பத்தாண்டு பட்டறிவு இதோ தவழவரும் புதுப்பரிசு

காலதாமதம் இவ்வளவுக்கும்
காரணமும் ஒன்றுண்டு
அசோகர் இல்லாமல் பிராமி யா?
எனவேதான்...
எம்துறைக்கு ஏற்றம் தர தலைமையேற்று
ஓர் அசோகவர்த்தனர் வரும் வரைக்கும்
காத்திருந்தாய் போலும்

அன்று புத்தமதம் தழுவிய அசோகர்
இன்றுஉன் புத்த(க)முதம் பருக வந்துள்ளார்
தொல்லெழுத்தியலுக்கும் அசோகருக்கும்
ஆயிரங்காலத்துத் தொடர்பு அன்றோ.

ஒரு போராசை
ஆங்கிலத்தில் தந்துவிட்டீர் இந்நூலை
அவசியம்தான் எனினும்
ஆறுகோடி தமிழரிடை
அரைக்கோடிப் பேருக்காவது
இது சென்றிவிடவேண்டு மெனில் இதை
இன்தமிழில் செய்திடவும் வேண்டும்
அவ்வாய்ப்பை அடியேனுக்கே
அளித்திடவும் வேண்டும்
வற்புறுத்தலில்லை வரமாகக் கேட்கின்றேன்
வரம்கிடைத்தால் நான் முடித்தால்
இத்தமிழ் கூறும் நல்லுலகில்
என்பெயரும் சிலகாலம் வாழும்
எனும் பேராசை - எள்ளற்க அவையோரே.
நல்வணக்கம் - நன்றி.

**சொ. சாந்தலிங்கம்**
**மதுரை.**

# தமிழை வளர்க்கும் தமிழே வாழ்க!

எண்ணியது எல்லாம் எண்ணியாங்கு எய்திடும்
திண்ணிய நெஞ்சத்தின் திறன் கொண்ட வீரரே!
மனத் திட்ப மாட்சி கொண்டீர்!
வினைத் திட்ப வெற்றி கண்டீர்!
எளிமையும் இனிமையும் இணைந்த நல் தோற்றம்;
அன்புடன் அணைத்திடும் கனிந்த நல் சுபாவம்;
வேண்டுதல் வேண்டாமை காணா நல் உபசரிப்பு;
உயர்ந்த நல் உள்ளம்; இவை பெற்ற நீர்
ஓர் உன்னத மனிதர்! நீர் அறிஞர் மட்டுமல்ல;
ஓர் அற்புத மனிதரும் கூட!
மகாதேவன் கயிலைக்கு நாதன்,
நீர் எழுத்துள்ள மலைக்கெல்லாம் தேவன்!
உன் தாள் பணிந்து வணங்குகின்றேன்.

தமிழுக்கோர் விழாவெனில்
தனிப்பெரும் மகிழ்வோடு
துள்ளி வரும் தூய உள்ளம்;
தான் சார்ந்த பொறியியலில்
பார் போற்றும் பேரறிஞர்;
குழந்தை சாமி ஐயாவும்
அருகிலிருந்து அக மலர்ந்து அன்போடு
கொண்டாடும் அற்புதத் திருநாள்!

அன்றோர் அசோக வர்த்தனர்
கல்வெட்டுகளால் அறம் வளர்த்தார்
இன்றோர் அசோக வர்த்தனர்
அறம் வளர்த்த கல்வெட்டுகள் உள்ளநூலை
வெளியிட்டுக் கல்வெட்டுக் காக்கும்
அறப்பணி தன்னுள் ஐக்கிய மானார்.

ஒரு சிலர் மட்டுமே படித்து வந்த கல்வெட்டை
ஊரெல்லாம் படிக்க வைத்த
மக்கள் நாயகன்; சிலை மீட்ட செம்மல்
எங்கள் கலைமாமணியும்,

சோணாடு என்றாலே
சுப்பராயலு என்று சொல்ல வைத்த
எங்கள் இனிய ஒய்எஸ்ஸும்
தொல்லியல் செல்வர் தூயவர் பிஎஸ்ஸும்

காவல் துறைக்கோர் மகுடமாய்த் தான்விளங்கிக்
கண்ணியம் காத்த உயர் பெரும் தலைவர்;
சமணமும் தமிழும் சமமாய்ப் போற்றும்
ஸ்ரீபால் என்னும் சிறந்த மனிதரும்,

கண்ணுக்கு மருத்துவத்தைக் கற்றுயர்ந்த வேளையிலும்
கண்ணாகக் கல்வெட்டைப் போற்றிவரும்
எங்கள் ஏற்றம் மிகு கலைக்கோவும்,

தொல்லியல் வளர்க்கின்ற தூய நற்பணிக்காகத்
தோன்றி வளர்ந்து வரும்
தொல்லியல் கழகத்தின் அன்பு நண்பர் குழாமும்,
சங்கத் தமிழ் காக்கும் சந்தோஷப் பெருக்கோடு
சங்கமிக்கும் இந்நாள், கல்வெட்டுத் திருநாள்!

பெரியீர்!
கல்லெழுத்து உமக்குக் காதலியின் முகமானது
அதனால் - ஒவ்வோர் எழுத்தும்
உம்மோடு காதல் ரகசியம் பேசியது;
அன்போடு நீரும் தொட்டுத், தடவி,
ரசித்து, மகிழ்ந்து, புள்ளியும் கோடும்
வளைவும் அறிந்தீர்!
எழுத்தின் மேல் என்றைக்கும்
அழுத்தமாய்க் காதல் கொண்டீர்!
எட்டாத உயரத்தில் இருக்கின்ற எழுத்தையும்
தொட்டுத் தடவி சுகம் மிகக் கண்டீர்!
சொல்லிலும் பொருளிலும்
சுவை புதிதும் கண்டீர்
கோடிகளைத் தேடிப் பலரும் நடக்கையில்
கோடுகளைத் தேடி நடந்ததும் கால்கள்!

நூலோடு மதிநுட்ப நுண்ணறிவு
மிகக் கொண்டு தெரிந்த இனத்தோடு
தேர்ந் தெண்ணிச் செயலாற்றி
காலமறிந்து கருவியால் வினையாற்றி
ஞாலம் போற்றும் நல்லதோர் நூல் செய்தீர்!

இன்றதன் பிறந்தநாள்;
கொழு கொழு குழந்தையாய்
இக் குழந்தை உலகமெல்லாம்
வலம் வந்து உயர்த்தட்டும் உம்புகழை
தம்பி தங்கைகளோடு வளரட்டும்

அவற்றிற்கும் நாம் வந்து
பாடிடுவோம் பல்லாண்டு!

அன்றிருந்த அறை அளவுக் கணினியின்
துணை கொண்டு கன்கார்டன்ஸ் தயாரித்து
சிந்துவெளிக் குறியீட்டில்
தெளிவுபெற வழி செய்தீர்!
அதனால் - சிந்துச்சம வெளிப் பண்பாட்டு
வாசகத்துள் தொல் தமிழர்
தடயங்கள் கண்டுணர்ந்து சொன்னவருள்
உங்கள் பெயருக்கோர் உயர் சிறப்பு என்று முண்டு.

மணியாகத் தினம் ஒலிக்கும்
மகத்தான நாளிதழும்
கனிந்த நின் சேவை தனில்
களித்திருந்த நாட்களுண்டு!
உங்கள் சேவைகளால் உலகமெல்லாம்
தமிழ் பரவ உரிய வழி கண்டீர்!
வெளிநாட்டார் வணங்கி யேற்கும்
உயர் புலமைத் திறம் பெற்றீர்!
பாரதி இன்று மீண்டெழுந்து சென்னை வந்தால்
உமையணைத்துப் 'பாப்'பாடி
மகிழ்ச்சியில் துள்ளிடுவார்!

தலைமுறை இடைவெளியைத்
தகர்த்தெறிந்த இளைஞர்,
தம்மைச் சுற்றியோர் இளைஞர் படை
என்றும் இருக்க இதயம் மகிழ்வீர்!
காட்சிக்கு எளியர், கற்பதில் புதியர்,
கடுஞ்சொல் அறியாது நெடிதுயர்ந்த வேந்தர்,
நூறாண்டு காலம் நீர் வாழ வேண்டும்,
நூல் பல இன்னும் நீர் தர வேண்டும்!

தமிழும் வரலாறும் மொழியிலும்
படிப்போர், கட்டாயம் உம் நூலைக்
கற்கின்ற நிலை வரணும்;
பாடத்திட்டங்கள் படைக்கின்ற பேர்களிதைக்
கவனமாய்ப் பின்பற்றும் காலமின்று மலரட்டும்!
ஆய்வுநூல் என்றால்
இப்படித்தான் இருந்திடணும்
என்பதற்கு வழிகாட்டும்
இனியநூல் உம் நூலே!

எல்லாம் தாமே என்று நினைக்கும்
எத்தனையோ ஆய்வாளர் இன்று முண்டு;
அவர்கள் மத்தியில் நீர் ஒரு தனிப்பிறவி,
சின்னச்சின்ன உதவியைக் கூட
செய்நன்றி மறவாது நூலில் குறித்தீர்;
அதனால் ஆய்வாளர் மத்தியில்
ஆயிரத்தில் ஒருவன் நீ!
ஆகவே குருவாக உமைக் கொள்ளும்
ஏகலைவர் பலர் வரணும்,
தெருவெங்கும் கல்வெட்டைத்
தினம் போற்றும் நாள் வரணும்!

சங்கத் தமிழாயும் சொல்லின் செல்வரே!
உங்கள் குருநாதர் உயர் மாமனிதர்
கேவிஎஸ்ஸும் வானத்திருந்துமை
வாழ்த்தி உவகை கொள்வார்!
கால்கடுக்க மலையேறிக்
கல்வெட்டை ஆய்ந்த உமை
கடுந்தவ முனிவர்கள் சமணப் பெரியோர்கள்
சிந்தை மகிழ்ந்து சிறப்போடு வாழ்த்திடுவர்!
சேரர் மரபறிந்து செப்பிய நின்திறம் வியந்து
மூவேந்தர் இன்று உமை
முத்தமிழால் வாழ்த்திடுவர்!

காலொடிந்து நடைமறந்து
நான் கிடந்த வேளையிலே
முகம் தெரியா எனைப் பார்க்க
முந்திவந்து நின்றீரே! மறக்கவா முடியும்?
அன்புக்கு நானடிமை;
என் இதயம் என்றென்றும்
உமக்கோர் சிம்மாசனம்!

தமிழை வளர்க்கும் தமிழே!
களிப்போடு எல்லோரும் கொண்டாடும்
இந்தக் கல்வெட்டுத் திருநாளில்
கல்வெட்டு ஆய்வாளன் இராசேந்திரன்யானும்
உயர் மாமனிதர் உன்னத அறிஞர்கோ
ஐராவதம் தந்த உன் அடி வணங்கி மகிழ்கின்றேன்
நன்றி! வணக்கம்!

அன்புடன்
பொ. இராசேந்திரன்
மதுரை.

# நூல் வெளியீட்டு விழா

தமிழகத் தொல்லியல் கழகத்தின் சார்பில் திரு.ஐராவதம் மகாதேவன் இ.ஆ.ப. (ஓய்வு) அவர்கள் எழுதிய Early Tamil Epigraphy-From the Earliest Times to the Sixth Century A.D. என்னும் நூல் வெளியீட்டு விழா 15.4.2003 அன்று சென்னை பாரதீய வித்யா பவன் கலை அரங்கில் மிகச் சிறப்பாக நிகழ்த்தப்பட்டது. விழாவில் கழகத்தின் தலைவர் முனைவர் கொடுமுடி ச.சண்முகன் வரவேற்புரை நிகழ்த்த முனைவர் வா.செ. குழந்தைசாமி



அவர்கள் தலைமை ஏற்றார். தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை ஆணையர் திரு.க.அசோக் வர்தன் செட்டி, இ.ஆ.ப. அவர்கள் நூலை வெளியிட்டார். தமிழக அரசு தொல்லியல் துறையின் முதல் இயக்குநர் (ஓய்வு) முனைவர் இரா.நாகசாமி, திரு.என்.ஸ்ரீபால் இ.கா.ப.(ஓய்வு), பேராசிரியர் முனைவர்





சு.சுப்பராயலு, பேராசிரியர் முனைவர் ப. சண்முகம், மருத்துவர் முனைவர் இரா. கலைக்கோவன், திரு.அறவாழி, முதன்மைக் கல்வி அலுவலர் (ஓய்வு) ஆகியோர் நூலின் சிறப்புக்களையும், நூலாசிரியரின் கடும் உழைப்பையும் பாராட்டிப் பேசினர். ஹார்வர்டு பல்கலைக் கழகத்திலிருந்து பெறப்பட்ட வாழ்த்துச் செய்திகளை திரு.இராமநாதன் படித்தளித்தார். வாழ்த்துக் கவிதைகளைத் திரு.செ. சாந்தலிங்கம் படித்தளித்தார். நூலின் பதிப்பாளர் க்ரியா திரு.எஸ். இராமகிருஷ்ணன் அவர்களும் நூலாசிரியர் திரு.ஐராவதம் மகாதேவன் அவர்களும் ஏற்புரை வழங்கினர். புலவர் செ. இராசு அவர்களின் நன்றியுரையுடன் விழா இனிதே நிறைவுற்றது.

கா. ராஜன்,
செயலர்.

A rare photograph of the Tamil Brahmi inscriptions book (Harvard Oriental Series 62) release function at Bharatiya Vidya Bhavan, Madras on 15th April 2003. The event announcement is given (AavaNam, 2003). Epigraphist Dr. S. Rajagopal has given a booklet he published at the event. Many thanks to Dr. SR for giving me this rare treasure, and future generations of Tamils will be able to read these pages. Iravatham Mahadevan's Harvard book is one of the most important works to understand and research the Iron Age of South India and Sangam Age of Tamil literature both from material and textual sources.

There are two prominent Tamil Jaina scholars (S. Sripal, Director General of Police and Dr. Aravaazhi, Chief Education Officer) on the dais as the Tamil Brahmi cave inscriptions contain a large percentage of gifts to Jaina monks.




The scholars on the dais are (L to R).
1. Kodumudi Shanmukam
2. Dr. R. Nagaswamy
3. Ashok Vardhan Shetty, Commissioner of Archaeology, TN
4. Dr. V. C. Kulandaiswamy
5. Iravatham Mahadevan
6. S. Sripal, DG of Police, Madras, a Tamil Jain
7. Aravaazhi (அறவாழி), Chief Education Officer, a Tamil Jain
8. Prof. Y. Subbarayalu
9. Prof. P. Shanmukam
10. Dr. R. Kalaikkovan, Trichy

http://nganesan.blogspot.com/2022/03/tamil-epigraphy-iravatham-harvard-2003.html



Shri. K. V. Subramania Iyer, born in Avinasi, and who categorically said the Brahmi inscriptions in the Tamil Nadu caves are in Tamil. Epigraphist Tiru. KVS was Iravatham Mahadevan's guru.

Dept. of Archaeology, Govt. pf Tamil Nadu and Roja Muthiah Research Library conducted an International conference in memory of Iravatham Mahadevan in March, 2022. Many Indus researchers and Tamil archaeologists took part. In this conference, I had an opportunity to talk about Sri. Iravatham's work and the need to rename his so called *Muruku* sign as *Makara-Viṭaṅkar* sign based on the 4700 years of representation of Dhruva Nakshatra as a crocodile, which became associated with Varuṇa in Post-Harappan times. For the first time, I showed some evidences (i) from Rock Paintings of Central India where Gharial crocodile is morphing into a man, and (ii) the 6-spoked chakram and crocodile-pond symbols on Pre-Mauyan punch marked coins (e.g., in Keezhadi) of this crocodile sign. Keezhadi excavations have revealed the crocodile sign in pottery. Here is the abstract of all the lectures, https://archive.org/details/iravatham-seminar-abstracts-tngovt-march-2022/page/n23/mode/2up?view=theater